# கல்வெட்டு

## KALVETTU

திருவள்ளுவராண்டு 2035 (தாரண ஆண்டு) ஆனித் திங்கள்



பாவை ஓவியம் திருமலைநாயக்கர் அரண்மனை

கல்வெட்டுக் காலாண்டிதழ் : 63 (ஜூலை 2004) விலை ரூ.5.00

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

| உள்ளே | | | பக்கம் |
|---|---|---|---|



20–7–2004 அன்று தொல்லியல் துறையின் சிறப்பு ஆணையர் திரு. தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப., அவர்கள் தலைமையில் முனைவர் சத்தியமூர்த்தி அவர்கள் திங்கட் பொழிவாற்றினார்.



27–7–2004 அன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு நடத்தப்பட்டது. முனைவர் கா. இராசன், அவர்கள் எழுதிய ‘தொல்லியல் நோக்கில் சங்ககாலம்’ என்ற நூலை உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் திரு.சா. கிருஷ்ணமூர்த்தி, அவர்கள் முன்னிலையில் தொல்லியல் துறை சிறப்பு ஆணையர் திரு. தி.ஸ்ரீ.ஸ்ரீதர், இ..ஆ.ப. அவர்கள் வெளியிட முதல் நூலை திரு.இராமமூர்த்தி, இ.ஆ.ப.(ஓய்வு) அவர்கள் பெற்றுக் கொள்கிறார்.



**தி. ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.
*சிறப்பு ஆணையர்,*
*தொல்லியல் துறை*

மூன்றாவது குறுக்குச் சாலை,
சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை – 600 113.
12–8–2004

# பதிப்புரை

காலம் நமக்கு விட்டுச் சென்ற சுவடுகளை கண்டறிந்து நாளைய சமுதாயத்திற்கு வழங்கிடும் வண்ணம் தொல்லியல் துறையின் பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அறிஞர் பெருமக்களும் ஆய்வு மாணாக்கர்களும் பயன் பெறும் வகையில் மட்டுமின்றி சாதாரண பொதுமக்களும் படித்தறிந்து நம் வரலாற்றையும், மரபுகளையும் போற்றிப் பாதுகாத்திடும் வண்ணம் பல நல்ல ஆய்வு நூல்களை தொல்லியல் துறை வெளியிட்டு வருகிறது. அவற்றுள் 'கல்வெட்டு' எனும் காலாண்டிதழ், வரலாற்றிற்கு புதிய செய்திகளையும், புதிய கண்டுபிடிப்புகளையும் சிறந்த ஆய்வுக் கட்டுரைகளையும் வெளியிட்டு வருகின்றது.

பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில் பொருளாதாரத்தை நிர்ணயிக்கும் கால்நடைச் செல்வங்களைப் பற்றி, கல்வெட்டினை அடிப்படையாகக் கொண்டு ஓர் ஆய்வுக் கட்டுரையும், சிதறிக் கிடக்கும் சிற்சில கல்வெட்டுகள்கூட வரலாற்றை செம்மைப்படுத்தும் என்பதை ''மாங்காட்டுச் சமணப் பள்ளி'' என்ற கட்டுரையும் நமக்கு உணர்த்துகிறது.

காலத்தின் சுழற்சியால் புதையுண்டுபோன பண்பாட்டு நகரங்கள், ஊர்கள் பற்றிய ஓர் தொகுப்புச் செய்தியும், இவ்விதழில் இடம் பெற்றுள்ளது. சிற்பங்கள் தரும் செய்தி புராண, ஆகம, வழிபாட்டோடு தொடர்புடையவை எனவே பன்முக நோக்கில் அவற்றைப் பற்றி ஆய்வு செய்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுவதாக ஓர் ஆய்வுக் கட்டுரையும், புதையுண்ட நகரங்களையும் வாழ்விடங்களையும் அறிவியல் நோக்கில் ஆய்ந்து கண்டறிந்து அகழ்ந்தெடுத்தல் பற்றியும் வெளிநாட்டவரோடு நம் நாட்டவர் கொண்டிருந்த வாணிபத் தொடர்பினை புலப்படுத்தியும் தொல்லியல் செய்திகளையும், தொல்லியல் நிகழ்வுகளையும் உள்ளடக்கியதாகவும், 11-வது நிதிக் குழுவின் மூலம் ரூ. 428.31 இலட்சம் செலவில் 32 நினைவுச் சின்னங்களை பாதுகாத்து பராமரித்திட பணிகள் நடைபெற்று வருகின்றன. இப்பணிகளைப் பற்றி மக்கள் அறிந்து பயன்பெறும் வகையில் இவ்விதழ் மூலம் தொடர் கட்டுரையாக இக்கல்வெட்டு இதழில் வெளிவருவது மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. இதனைப் படித்து பயன்பெறுவதோடு, வரலாற்றுச் சின்னங்களையும் மரபுகளையும் போற்றிப் பாதுகாத்திட வேண்டும் என்பதே எமது நோக்கம்.

**தி. ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.



# தமிழகக் கல்வெட்டுகளில் பசு

**இரா. சிவானந்தம்,**
நூலகர்

பண்டைச்சமுதாய மக்களின் பொருளாதார நிலையை நிர்ணயித்தவை கால்நடைச் செல்வங்களாகும். சங்ககால வழக்கத்தின்படி ஒரு நாட்டின் மீது படையெடுப்பதற்கு முன் அந்நாட்டிலிருந்து ஆநிரைகளைக் கவர்ந்து வருவது நிரைகோடல் என்றும் கவரப்பட்ட ஆநிரைகளை மீட்டு வருவது நிரை மீட்டல் என்றும் நெறிமுறை சொல்லிப் பொருளாதாரத்தை மேம்படுத்தினர். இடைக்கால அரசர்கள் பொன், பொருள், பெண்டிர் பண்டாரம் என்று அனைத்தையும் படையெடுத்த நாட்டிலிருந்து கொண்டு வந்துள்ளனர் என்பதை அவர்களது மெய்க்கீர்த்திகளால் அறிய முடிகிறது. இடைக்கால இறுதியில் நிலமும். நிலத்தின் மீது விதித்த வரியின் மூலம் வந்த வருவாயும் பொருளாதாரத்தை நிர்ணயித்தன.

கால்நடைகளைக் கோயில்களுக்கு விளக்கெரிக்கத் தேவையான நெய்யிற்காகவும், இறைவனுக்குப் பாலாடுதல் மற்றும் நெய் அமுதுக்காகவும் கொடையாக அளித்தனர். அத்துடன் உழவிற்காகவும் பயன்பட்டுள்ளதைக் கல்வெட்டுகளால் அறியலாம். ஆடு, பசு, எருது எருமை ஆகிய கால்நடைகளில் பசுவைப் பற்றிக் காலம், இடம், வகை வாரியான செய்திகளைக் கல்வெட்டுகள் வழியாக இங்கு காண்போம்.

### சங்ககாலக் கல்வெட்டுகளில் பசு

சங்ககாலக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழி எழுத்துக் கல்வெட்டுகளாக கிடைக்கின்றன. இவற்றில் பசு பற்றிய குறிப்பு எதுவும் காணப்படவில்லை. ஆனால் சித்தன்னவாசல் கல்வெட்டில்

எருமி நாடு குமுழ் ஊர் பிறந்த காவுதிஈ
ஏதன்கு சிறுபோசில் இளயர் செய்த அதிட்டனம்

என்பதில் எருமை நாடு என்ற நாட்டின் பெயர் அறியக்கிடைக்கிறது. இதனை உறுதிபடுத்தும் விதமாக எருமை நன்னாடு[1], எருமையூர்[2] என்று சங்க நூல்களில் குறிப்புகள் உள்ளன. எருமை நாடு மகிஷ நாடு எனும் மைசூர் பகுதி என்பர்.

**நடுகற்களில் பசு**

நிரைகோடல் மற்றும் நிறை மீட்டலின் போது இறப்பவருக்கு நடுகல் நடும் மரபு பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் இருந்தாலும் அத்தகைய சங்ககால நடுகற்கள் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை.

செங்கம் பகுதியில் கிடைக்கின்ற நடுகற்களில் தொறு இடுவித்துப்பட்டான்[3], தொறு கொண்ட ஞர்ன்று சென்று தொறு இடுவித்து பட்டாரு,[4] தொறுக் கொண்ட ஞான்று பட்டார்,[5] எருமைத் தொறு மீட்டு பட்டான்[6], தொறு மீட்டுப் பட்டான் கல்,[7] தொறு கொள்ளத் தொறு மீட்டுப்பட்டார்,[8] என்ற சொற்றொடர்கள் முறையே முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன், இரண்டாம் நரசிம்மவர்மன், கம்பவர்மன், முதலாம் பராந்தக சோழன், மற்றும் சுந்தரசோழன் காலத்தவையாகக் கிடைக்கின்றன.

**பசுக்கூட்டம்**

காலி, நிரை, தொறு, கறுப்பு, காலேயம் என்ற பெயர்களால் பசுக்கூட்டத்தினை வேறு பெயர்களால் பிங்கல நிகண்டு குறிப்பிடுகிறது. குலோத்துங்க சோழனின் மூன்றாவது ஆட்சியாண்டில் திட்டக்குடி தான்தோன்றீஸ்வரர் கோயில் கல்வெட்டில் குறுப்பெறிந்து நிரை கொண்ட ஆடும் மாடும் எருமையுங் கிடாவும் என்ற சொற்றொடரால் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை நிரை என்ற சொல் வழக்கத்திலிருந்ததை அறிகின்றோம்,

தொறு நடுகற்களிலும், 7-ஆம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் தேவாரம் திருவண்ணாமலைப் பதிகத்திலும், 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒன்பதாம் திருமுறையான திருவிசைப் பாவிலும்[9] குறிப்பிடப்பட்டுள்ளதால் 11-ஆம் நூற்றாண்டுவரை இலக்கியத்திலும், கல்வெட்டிலும் இச்சொல் பயன்படுத்தப்பட்டதை காணலாம்.

**கொடைகளில் பசு**

தொடக்கத்தில் கோயிலுக்கு நல்கப்படும் ஆடுகளும், பசுக்களும் ஒரு விளக்கிற்கு இவ்வளவு என்று எண்ணிக்கை நிர்ணயிக்கப்படாமல் சொல்லப்படுகின்றன. சோழ அரசர்களின் காலத்தில் பெரும்பாலும் தொண்ணூற்றாறு ஆடுகள் கொடையாக ஒரு விளக்கெரிக்கக் கொடுக்கப்பட்டுள்ளன. பசுக்கள் கொடையாக வழங்கப்பட்ட போது முப்பத்திரண்டு பசுவும் ஒரு ரிஷபமும் சேர்த்து முப்பத்துமூன்று எண்ணிக்கையும் மற்றும் இதன் மடங்காகவும் அளித்துள்ளனர்.

### பசுக்களின் வகைகள்

பசுக்களைக் குறிப்பிடும்போது நற்பசு,[10] நல்லெருது நல்பசு,[11] சாவாமூவாப் பெரும்பசு[12] சாவா மூவாப்பசு,[13] என்று குறிப்பிட்டு அவை கொடையாக அளித்ததை உறுதிப்படுத்து கின்றன. மேலும் ''பால்ப்பசு பத்தும் சினைப்பசு பத்தும் பொலி முறைநாகு பன்னிரெண்டும் இஷபம் ஒன்றும் ஆக முப்பத்து மூன்றும்,[14] ''பாற்பசு, சினைப்பசும் நாகும் முப்பத்திரெண்டும் இசபம் ஒன்றும்''[15], பால்பசு பத்து, சினைப்பசு பன்னிரெண்டு வறள்பசு ஆறு, கிடாரி நாகு நாலு இஷபம் ஒன்று''[16]. என்ற சொற் றொடர்களையும் கல்வெட்டுகளில் காண்கிறோம்.

இவற்றில் பாற்பசு, பால்பசு என்பன பால் தருபவை. சினைப் பசு என்பது சினையுடன் கூடிய பசு. பொலிமுறை நாகு என்பது கன்று ஈனும் பருவத்தில் உள்ள கிடாரி கன்று ஆகும். இதில் பொதுவாக நாகு என்றால் கிடாரி கன்றையே குறிக்கும். வறள்பசு என்பது பால் தந்து வறண்ட நிலையில் உள்ள பசுவாகும்.

### கன்றுகள்

பசு நாலு கிடாரி ரெண்டு செவிரண்டு ஆக உரு அ இவ்வுரு எட்டும்[17] என்ற கல்வெட்டுச் சொற்றொடர் பசுவின் வகை மற்றும் பருவத்தினைக் குறிப்பிட்டதோடு மட்டுமல்லாமல் கன்று களையும் அதன் இன வேறுபாட்டையும் குறிப்பதைக் காண்கிறோம்.

கிடாரி, நாகு[18] என்பவை பெண் கன்றைக் குறிப்பதாகும். சே[19], பொலி எருது[20], பொலி இஷபம்[21] ஆகியவை ஆண் இனத்தைக் குறிப்பவையாகும். இளவெருது சேங்கன்று[22] என்று குறிப்பிடப் பட்டுள்ளது. பொலி எருது, பொலி இஷபம் என்பவை இனப் பெருக்கத்திற்காக வளர்க்கப்படும் எருதுகளாகும். இதனாலேயே பசுக்கள் முப்பத்திரண்டுடன் இசபம் ஒன்றும் சேர்த்தே கொடுத் துள்ளதை கல்வெட்டுகள் சொல்கின்றன. பால் எருமை இதன் கன்று பூணி[23] என்று வரும். திருமாணிக்குழிக் கல்வெட்டு ஆண் எருமைக் கன்றை பூணி என்று அழைத்ததைக் காட்டுகிறது.

### பசு வளர்ப்பவர்கள்

கொடையாக அளிக்கப்பட்ட ஆடுகள் இடையர், மன்றாடி போன்றோரிடம் கொடுத்து வளர்க்கப்பட்டுள்ளன. ஆனால்

பசுக்களை இடையர், மன்றாடி இனத்தவரில் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கே அளித்துள்ளதை சுரபி மன்றாடி[24], சுரபி இடையர்[25], சுரபி மன்றாடிகளில் மணவாளக் கோன்[26], சுரபி மன்றாடிகளில் இரண்டாயிரக் கோளான்[27], சுரபி மன்றாடிகளில் மூவாயிரக் கோன் மடியன்[28] என்ற கல்வெட்டுச் சொற்றொடர்கள் காட்டுகின்றன. எனவே சுரபி இடையர், சுரபி மன்றாடி, சுரபி மன்றாடிகளில் கோன், கோனான் என்பவர்கள் பசுக்களை மட்டுமே பராமரித்தனர் என்று உய்த்துணரலாம்.

### ஓம்படைக்கிளவிகளில் பசு

கல்வெட்டுகளின் இறுதிப் பகுதியான ஓம்படைக்கிளவிப் பகுதியில் இத்தன்மத்துக்கு அகிதம் பண்ணினவர்கள் "கெங்கையிடை குமரியிடை குரால் பசு கொன்றான் பாவம் கொள்வான்"[12] என்றும் கெங்கைக் கரையிலே குரால் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவான்."[30] "காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவான்"[31], கபிலைப் பசுவைக் கொன்றவன் பாவங் கொள்ள கடவன்"[32] என்ற சொற்றொடர்கள் காணப் படுகின்றன. குரால் பசு புகர் நிறம் (Tawny brown) கொண்ட பசுவாகும், தெய்வப்பசுவாக கருதப்படும் கபிலைப்பசுவின் நிறம் கருமை கலந்த பொன் நிறமாகும். காராம் பசு வேறு நிறங் கலவாத கறுத்த நிறப் பசுவாகும். சுரபி என்ற காமதேனு என்னும் புனிதப்பசு வெள்ளை நிறங்கொண்டதாகும். இவற்றிலிருந்து குரால், காராம் பசு, கபிலை, சுரபி என்று நிறங்களின் அடிப் படையில் அவற்றிற்குப் புனிதம் சேர்த்து வழங்கிய மரபைக் காண்கிறோம்.

ஓம்படைக் கிளவிகளில் வரும் இச்செய்திகள் சோழர் காலத்தில் தொடங்கி விஜயநகரர் காலக் கல்வெட்டுகள் வரை பெரும்பான்மையாகக் காணப்படுகின்றன.

அடிக்குறிப்புகள்

1. அகநானூறு 253 : 9
2. மையூர் – மைசூர். பதிற். முதி 9:1
3. நாகசாமி, இரா; செங்கம் நடுகற்கள் 1971/50
4. மேலது 1971/36
5. மேலது 1971/54

| | | |
|---|---|---|
| 6. | மேலது | 1971/57 |
| 7. | மேலது | 1971/45 |
| 8. | தெ.இ,கல்.தொகுதி | XIII/268 |
| 9. | திருவிசையப்பா. 224 | |
| 10. | தெ.இ,கல்.தொகுதி | IV/816 |
| 11. | தெ.இ.கல்.தொகுதி | IV/301 |
| 12. | தெ.இ.கல்.தொகுதி | IV/393 |
| 13. | தெ.இ.கல்.தொகுதி | IV/643 |
| 14. | தெ.இ.கல்.தொகுதி | IV/350 |
| 15. | மேலது | IV/819 |
| 16. | மேலது | IV/822 |
| 17. | தெ.இ.கல்,தொ. | IV/310 |
| 18. | மேலது | VIII/394 |
| 19. | மேலது | XII/237 |
| 20. | மேலது | VII/115, 117 |
| 21. | மேலது | VIII/115 |
| 22. | மேலது | XIII/132 |
| 23. | மேலது | VII/794 |
| 24. | மேலது | XII/232 |
| 25. | மேலது | IV/818 |
| 26. | மேலது | XII/232 |
| 27. | மேலது | XII/213 |
| 28. | மேலது | XII/249 |
| 29. | மேலது | VIII/80 |
| 30. | மேலது | IV/164 |
| 31. | மேலது | IV/829 |
| 32. | மேலது | IV/355 |



2

# மாங்காட்டுச் சமணப் பள்ளி

கி. ஸ்ரீதரன், பதிவு அலுவலர்
சீ. இராமசந்திரன், கல்வெட்டாய்வாளர்

காஞ்சிபுரம் மாவட்டம், தாம்பரம் வட்டம் ஆலந்தூரில் உள்ள சிவசுப்ரமணிய சுவாமி கோயில் நுழைவாயிலில் பல்லவர் காலக் கல்வெட்டு ஒன்று பதிக்கப்பட்டுள்ளது அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டது. கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ள கல் 2 மீட்டர் நீளம் 2 மீட்டர் அகலமுடைய கற்பலகையாக விளங்குகிறது.

அக்கல்வெட்டு பல்லவ மன்னன் கம்பவர்மனின் ஆட்சிக் காலத்தில் கி.பி. 875-ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்டதாகும்.[1]

**கல்வெட்டு வாசகம்**

1) ஸ்ரீ கோவிசைய கம்ப விக்கிரம வர்மற்கு யாண்டைந்தா வதின் சித்திரை முதலாகப் புலியூர்க் கோட்டத்து மாங்காடு நாட்டு மாங்காட்டு திருவராந்தானத்துக்கு [ஆர்க்]

2) காட்டுக் கூற்றத்து பரிபண்டத்துறை பரிசை கிழார் அமர் நிலையார் மகளார் இப்பள்ளி உடைய அநந்தவீரக்குரவர் மாணாக்கியார் கு . . . அடிகள் திருவமுதுக்கு வைத்த நெல்லறுபதின்

3) [குறுணி] முந்நாழி நெல்லால்விக்கட்டு வோமானோம் அவிச் சொரியுந்தால் முப்பதின் பலத்தாவிட்டார் இதுக்கு முட்டாமைச் . . . . .

சென்னையை அடுத்த மாங்காட்டில் ''திருவராந்தானம்'' எனப்பட்ட சமணப்பள்ளி பல்லவர் காலத்தில் இருந்தது என இக்கல்வெட்டால் அறிய முடிகிறது. அருகன்தானம் (அர்ஹத்ஸ் தானம்) என்ற தொடரே 'அராந்தானம்' என வழங்கியுள்ளது. அராந்தானம் மணிமேகலையிலும் (3:82, 5:23) அரா அந்தாணம் என்ற குறிப்பு பெருங்கதையிலும் (2:2:138, 2:6:161, 5:4:151) காணப்படுகிறது. அராந்தானம் என்பதே திரு என்ற அடைமொழி பெற்றுத் ''திருவராந்தானம்'' என்று இக் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது.

மேலும் மாங்காடு காமாட்சியம்மன் கோயிலின் தளத்தில் காணப்படும் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1256) கல்வெட்டு மாங்காட்டிலிருந்த சமணப்பள்ளியைச் சேர்ந்தது

என்பதை அறியமுடிகிறது[2] அச்சமணப்பள்ளியே "மாங்காட்டுத் திருவராந்தானம்" என ஆலந்தூர்க் கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறது.

மாங்காட்டிலிருந்த சமணப்பள்ளியின் நிர்வாகியாக அநந்த வீரக்குரவர் என்ற ஆசார்யர் இருந்தாரென்றும், அவரது மாணாக்கியராக "கு . . . அடிகள்" என்ற பெயரில் ஒரு பெண்மணி இருந்தார் என்றும், அவர் ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பரிபண்டத் துறை பரிசை கிழார் அமர்நிலையார் என்பவரின் மகளாவார் என்றும் இக்கல்வெட்டால் தெரியவருகின்றன. தஞ்சை மாவட்டம் கண்டியூருக்கு அருகில் உள்ள ஆர்க்காடு என்ற ஊரைத் தலைமை யிடமாகக் கொண்டு ஆக்க்காட்டுக் கூற்றத்துப் பரிவண்டத்துறை புரிசை என்ற ஊர் இருந்ததைத் திருப்பழனம், திருமழபாடிக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.[3] அவ்வூரே 'பரி பண்டத்துறை பரிசை' என ஆலந்தூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பரிபண்டத்துறை பரிசை கிழார் அமர்நிலையாரின் மகளார், மாங்காட்டுச் சமணப்பள்ளியில் அவி(ஹவிஸ்) எனப்பட்ட படைய லுக்காக அறுபதுகாடி (கலம்), ஒரு குறுணி, மூன்று நாழி அளவு நெல் வழங்கியுள்ளார். மேலும் அவி படைப்பதற்குரிய தாலம் (தட்டு) ஒன்று முப்பது பலம் எடையுள்ளதாகச் செய்வித்து வழங்கி யுள்ளார். இக்கொடையினை ஏற்று அவி படைக்கும் பொறுப்பு வகித்தவர்கள் பற்றிய விபரம் இக்கல்வெட்டின் இறுதியில் பொறிக்கப்பட்டுள்ளது. ஆனால் எழுத்துக்கள் முற்றிலும் தேய்ந்து அழிந்து விட்டதால் வாசிக்க இயலவில்லை. மாங்காட்டுச் சமணப் பள்ளிக்குரிய இக்கல்வெட்டு அச்சமணப்பள்ளி முற்றிலும் சிதைந்து போன பின்னர், இங்கு கொண்டு வந்து கட்டப்பட்டிருக்கலாம்.

கம்பவர்ம பல்லவனின் கல்வெட்டில் தஞ்சைப் பகுதியைச் சேர்ந்தவரும், பல்லவ நாட்டில் கல்விக் கற்றுச் சமண சமய அடிகளாக உருவானவருமான ஒரு பெண்மணியின் கொடை இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருப்பது சிறப்பானதாகும்.

---

அடிகுறிப்புகள்

1. கல்வெட்டினைப் படியெடுப்பதிலும், படிப்பதிலும், பங்கு கொண்டவர் திரு. க. ஈஸ்வரன், கல்வெட்டு படிப்பவர், சென்னை.
2. Annual Report on Epigraphy : 358/1908.
3. South Indian Inscriptions Vol XIII Nos: 145, 315, 324)





# 2003, 2004 - ஆம் ஆண்டு அகழாய்வுக்கென கள ஆய்வு மேற்கொள்ளப்பட்ட இடங்கள்

*சீ. வசந்தி*
அகழாய்வாளர்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஒவ்வொரு ஆண்டும் தொன்மை மற்றும் வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களை அகழாய்வு செய்து வருகின்றது. அகழாய்வுக்குரிய முதனிலைப் பணியாக மேற்பரப்பு ஆய்வு விளங்குகிறது. இத்துறையின் தொழில்நுட்ப அலுவலர்கள் மேற்கொண்ட களஆய்வில் தொல்லியல் தடயங்கள் கிடைத்துள்ள இடங்களும் அவை பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் இக்கட்டுரையில் தொகுத்தளிக்கப்படுகிறது.

### *மரக்காணம்*

மரக்காணம் தற்போதைய கிழக்குக் கடற்கரை சாலையில் திண்டிவனத்திலிருந்து சுமார் 35 கி.மீ. தொலைவில் விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது.

வங்காள விரிகுடா கடற்கரையில் கி.மு. 300 ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத் துறைமுகப் பட்டினமாக மரக்காணம் திகழ்ந்துள்ளது. தொண்டை மண்டலத்தில் சிறந்த துறைமுகப்பட்டினமாகத் திகழ்ந்த மரக்காணத்தைப் பற்றிய செய்திகள், சங்க இலக்கியங்கள் ஆன 'சிறுபாணாற்றுப்படை' 'பெரும்பாணாற்றுப் படை' ஆகியவற்றில் காணப்படுகின்றன. இவ்வூர் அக்காலத்தில் எயிற்பட்டினம் எனவும் வழங்கப்பட்டது. சங்க காலத்தில் கிடங்கிலை (தற்போதைய திண்டிவனம்) தலைநகராகக் கொண்டு நல்லியக் கோடன் என்ற சிற்றரசன் ஆட்சி புரிந்தான். அம்மன்னனின் துறைமுகப்பட்டினமாக மரக்காணம் திகழ்ந்தது. பெரிப்ளூஸ் என்னும் கிரேக்க நூல் இந்தப் பட்டினத்தை 'சோபட்மா' என்று கூறுகிறது, சோபட்மா என்பது சோ பட்டினமாக மருவி வழங்கப்பட்டது.

### *மோதூர்*

தருமபுரி - கிருஷ்ணகிரி நெடுஞ்சாலையில் தர்மபுரியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில், மோனூர் அமைந்துள்ளது.

இவ்வூரில் காணப்படும் மோதூர் மலையின்கீழ் தொடர்ச்சியாக 15 ஏக்கர் நிலப்பரப்பில் காணப்படும் மண் மேட்டில் பண்டைய பானை ஓடுகள் கிடைக் கின்றன. இம்மேட்டை ஒட்டியே கோட்டை மேடு என அழைக்கப்படும் மற்றொரு மண்மேடு காணப்படுகின்றது. இப்பகுதியிலும், புதிய கற்காலக் கல்லாயுதங்களும் பெருங்காலத்தைச் சேர்ந்த கருப்பு, சிவப்பு வண்ணப் பானை ஓடுகளும் கிடைக் கின்றன. எனவே மோதூரில் அகழாய்வு செய்வதன் மூலம் கி.மு. ஐயாயிரம்

ஆண்டுகளுக்கு முன்பு, புதிய கற்காலத்தில் மக்களின் வாழ்க்கை நிலையையும், அதன் பின்னர் தொடர்ச்சியாக வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிலையையும் அறியலாம்.

மேலும் இவ்வூரில் கி.பி, 6, 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்து நடுகற்கள் கிடைத்துள்ளன. இம்மண்மேட்டில் அருகில் சுமார் 1 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பாறைகளில் சமணர் படுக்கைகள், கல்வெட்டுகள் ஏதுமின்றி காணப் படுகின்றன.

மோதூரில் சோழமன்னர்கள் மற்றும் போசள மன்னர்களின் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'நிகரிலி சோழ மண்டலத்து தகடூர் நாட்டு மோதூர்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே இப்பகுதியில் அகழாய்வு மேற்கொள்வதால் வரலாற்றுக்கு முந்தையகாலம் முதல் வரலாற்றுக் காலம் வரையிலான காலகட்டத்திய வரலாற்றை அறிய இயலும்.

*ஆண்டிப்பட்டி*

திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டத்தில் செங்கத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் செங்கம் நீப்பந்துறை சாலையில் மேல்பள்ளிப்பட்டி அருகில் இவ்வூர் அமைந்துள்ளது.

செங்கம் பகுதி பல வரலாற்றுச் சிறப்புகளைக் கொண்ட இடமாகும். இவ்வூரில் பல அரிய சங்க காலத்திய நடுகற்களும், ஈயக்காசுகளும், பெருங்கற் கால ஈம பானை ஓடுகளும் கிடைத்துள்ளன. எனவே பல தொல்லியல் சிறப்புக் களைப் பெற்றிருக்கும் செங்கத்தில் உள்ள ஊர் ஆண்டிப்பட்டியாகும்.

ஆண்டிப்பட்டியில் கி. பி. 1967-ஆம் ஆண்டு 143 ஈயக்காசுகள், புதையலாகக் கிடைத்தன. இக்காசுகள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டை, அதாவது சங்க காலத்தைச் சேர்ந்ததாகும். தமிழகத்தில் சங்ககால எழுத்துப் பொறிக்கப்பட்ட நாணயங்கள் ஆண்டிபட்டியில்தான் முதன்முதலாகக் கிடைத்தன. 'அதிண்ணன் எதிரான் சேந்தன்' என்ற வாசகம் ஒரு புறமும் மறுபுறம் வளைவு கோடுகளால் ஆன குறியீடுகளும் காணப்படுகின்றன. இக்காசுகளில் குறிப்பிடப் பட்டுள்ள மன்னர் இப்பகுதியை ஆண்ட குறுநில மன்னனாக இருக்கக்கூடும். மேலும் சங்ககாலப் புலவரான கௌசிகனார், செங்கம் பகுதியைச் சேர்ந்த நன்னன் சேய் நன்னன் என்ற சிற்றரசன் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஆண்டிப்பட்டிக்கு 15 கி.மீ. தொலைவில் உள்ள செங்கம் பகுதியில் ஆண்ட குறுநிலமன்னர்களைப் பற்றி 'மலைபடுகடாம்' குறிக்கின்றது. மேலும் ஆண்டிப்பட்டி வழியாக செல்லும் 'செங்கம் கணவாய்' (CHENGAM PASS) சங்க காலத்தில் தமிழகத்தின் மேற்கு, கிழக்குப் பகுதிகளை இணைக்கும் முக்கிய சாலையாக விளங்கியுள்ளது.

ஆண்டிப்பட்டிக்கு மேற்கே 'கல்லோடை' என்று வழங்கப்படும் மேட்டுப் பகுதியில், இந்திரன் குடியிருப்பு என்ற இடத்திலும் பெருங்கற்கால ஈமச்சின்ன வகையான கல்வட்டங்கள் காணப்படுகின்றன,

மேலும் ஆண்டிப்பட்டி ஊருக்கு கிழக்குப் பகுதியில் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்திருந்த வாழ்விடப்பகுதி மண்மேடாகக் காட்சியளிக்கின்றது. இம்மேடு தற்போது 'நந்தமேடு' என்று அழைக்கப்படுகிறது. இம்மேட்டுப்பகுதியில் கருப்பு, சிவப்புப் பானை ஓடுகள், சிவப்பு வண்ண பானை ஓடுகள், கருப்பு வண்ண பானை ஓடுகளும் கிடைத்துள்ளன.

இவ்வாறு பல வரலாற்றுச் சிறப்புகளை கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. 6-7 ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வதுள்ள இவ்வூரில் அகழாய்வு செய்வதன் மூலம் தமிழக வரலாற்றுக்குப் புதிய ஒளி கிடைக்க வாய்ப்புள்ளது.

### கீழப்பழுவூர்

திருச்சி நகரிலிருந்து 50 கி.மீ. தூரத்தில் திருச்சி - அரியலூர் நெடுஞ் சாலையில் அமைந்துள்ள ஊர் கீழ்ப்பழவூராகும்.

பழுவேட்டரையர்கள் என்ற சிற்றரசர்கள் கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல் இப்பகுதியினை சோழப் பேரரசர்களின் கீழ் ஆட்சி செய்து வந்தனர். இவர்களது தலைநகராக பழுவூர் இருந்துள்ளது. ஆனால் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்கு முன்னரே இவ்வூரில் உள்ள திரு. ஆலந்துறை மகாதேவர் கோயிலைப் பற்றி திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

கீழப்பழுவூரும், மேலப்பழுவூரும் இணைந்த பகுதிகள் ஆலமரங்கள் நிறைந்த காடாக இருந்துள்ளன. எனவே இவ்வூர் பழுவூர் (ஆலந்துறை) என்று பெயர் வழங்கப்பட்டுள்ளது. இங்குள்ள சோழர் காலத்திய கல்வெட்டுகளில் இரண்டு கோயில்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை பசுபதீஸ்வரர் கோயில், திருஆலந்துறை மகாதேவர் கோயில் ஆகும். இப்பகுதி குன்றக்கூற்றம் என இராஜராஜன் காலத்தில் வழங்கப்பட்டது. பின்னர் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் நித்த விநோதவள நாட்டுடன் சேர்க்கப்பட்டது, எனவே சோழர்கள் காலத்தில் மிகச் சிறந்த சிற்றரசர்களின் தலைநகராக இருந்த இவ்வூரில் உள்ள மண்மேடு, மாளிகை மேடு, நாணயசாலை என இரண்டு பகுதிகளாக இருந்துள்ளன. இப்பகுதியில் பெருங்கற்கால மட்கலன்களின் உடைந்த பகுதிகள் மத்திய காலப் பானை ஓடுகள் போன்றவை கிடைத்துள்ளன. எனவே மத்திய காலத் தமிழகத்தி சிற்றரசு ஒன்றின் தலைநகரின் அமைப்பினையும் அவர்களது அரண்மனை அமைப்பினையும் அறிய இப்பகுதியில் அகழாய்வு மேற்கொள்ளலாம்.

### உத்தமபுரம்

தேனி மாவட்டம் கம்பம் நகருக்கு மிக அருகில் அமைந்துள்ள கிராமம் உத்தமபுரம். இவ்வூரில் ஒரு மண்கலயத்தில் ரோம் நாட்டு மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களும், சில வெள்ளி அணிகலன்களும் புதையலாகக் கிடைத்தன. இக் காசுகள் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவைகளாகும். ரோமானிய மன்னன் அகஸ்டஸ்ச்சரின் பெயர் பொறிக்கப்பட்ட நாணயங்களாகும். மேலும் இவ்விடத்தில் சங்க காலத்திய கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் மேடு பள்ளமான ஓடுகள் ஆகியவை கண்டறியப்பட்டன. இவ்விடத்தில் மேற்கொள்ளப்படும் அகழாய்வின் மூலம் பெருங்கற்காலம் மற்றும் சங்க காலப் பண்பாட்டுச் சின்னங்களை வெளிக் கொணரமுடியும்.

### பட்டரைப் பெரும்புதூர்

திருவள்ளூர் மாவட்டம், திருவள்ளூர் வட்டத்தில் உள்ள ஊர் பட்டரைப் பெரும்புதூர்.

இவ்வூரில் சாம்பல் கலந்த மேடு (ASH MOUND) இருளர் தோப்பு என்ற இடத்தில் காணப்படுகின்றது. இம்மண்மேட்டில் கருப்பு சிவப்பு நிறப்பானை ஓடு களும், குறியீடுகள் (GRAFFITI) உள்ள பானை ஓடுகளும், சிவப்பு வண்ண பானை ஓடுகள் ஆகிய தொல்பொருட்கள் சேகரிக்கப்பட்டன. பூண்டியிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் வரலாற்றுக்கு முற்பட்ட கால மக்கள் வாழ்ந்த தற்கான தடயங்களான கல்லாயுதங்கள் அதிக அளவில் கிடைத்துள்ளதால் இவ் விடத்தினை அகழாய்வு செய்வதன் மூலம் பழைய கற்காலம் முதல் பெருங் கற்காலம் வரை தொடர்ந்து இப்பகுதியில் மக்கள் வாழ்ந்திருந்தனரா என்ற வினாவிற்கு விடை கூற இயலும்.

### பெரும்பாலை

பெரும்பாலை என்ற ஊர், பெண்ணாகரம் வட்டம், தருமபுரி மாவட்டத்தில் பெண்ணாகரத்தில் இருந்து 35 கி.மீ. தொலைவில் மேலச்சேரி செல்லும் சாலையில் அமைந்துள்ளது.

பண்டைய தமிழகத்தில், கொங்குநாட்டின் வடபகுதி எல்லையாகப் பாலாற்றங் கரையில் பெரும்பாலை அமைந்துள்ளது. பாலாற்றங்கரையின் இடது பக்கத்தில் சுமார் மூன்று மீட்டர் உயரமுடைய மண்மேடு உள்ளது. இம்மண்மேட்டில் பெருங் கற்காலப் பானை ஓடுகள் சேகரிக்கப்பட்டன. இங்கு மண் கோட்டை இருந்ததாகவும் கூறுவர். பெருங்கற் புதை குழிகளும், வரலாற்றுக் காலத்திய நடுகற்களும் இப்பகுதியில் காணப்படுகின்றன. எனவே இவ்வூர் பாலாற்றங்கரையில், கொங்கு நாட்டின் வட எல்லைப் பகுதியாக இருப்பதாலும் அதிக அளவில் பண்டைய பானை ஓடுகள் காணப்படுவதாலும், இப்பகுதி தொன்மை வாய்ந்த சிறப்புமிக்க இடமாக இருப்பதாலும், இங்கு அகழாய்வு மேற்கொண்டு பல அரிய தொல்பொருட்களை வெளிக்கொண்டு வர இயலும்.

### தொகரப்பள்ளி

கிருஷ்ணகிரி, மத்தூர் சாலையில் கிருஷ்ணகிரியிலிருந்து 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊர் ஆகும் இது.

தொகரப்பள்ளி மலையின் வடக்கே அடிவாரத்தில் மண்மேடு அமைந்துள்ளது. இப்பகுதியில் புதிய கற்கால மக்கள் பயன்படுத்திய சாம்பல் வண்ண பானைகளின் உடைந்த ஓடுகள் கிடைத்துள்ளது. 1980-ஆம் ஆண்டு, மத்திய தொல்லியல் ஆய்வுத்துறையில் அப்போதைய சென்னை வட்டக் கண்காணிப்பாளர் ஆக இருந்த முனைவர் பி. நரசிம்மையா அவர்கள் மாதிரி அகழாய்வு மூலம் சாம்பல், பழுப்புநிற பானைஓடுகள், சிவப்பு வண்ண பானைஓடுகளைச் சேகரித்துள்ளார். இவற்றைக் கருத்தில் கொண்டும், இவ்விடத்தில் புதிய கற்காலம், பெருங்கற்காலம் மற்றும் வரலாற்றுக் காலம் வரை தொடர்ந்து மக்கள் வாழ்ந்திருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளதாலும் அகழாய்வு செய்ய ஏற்ற இடமாகக் கருதப்படுகிறது,

### கடத்தூர்

தருமபுரி மாவட்டம் பாப்பிரெட்டிப்பட்டி வட்டத்தில் தருமபுரியிலிருந்து சுமார் 22 கி.மீ. தென்கிழக்கு திசையில் அமைந்துள்ளது.

கடத்தூரிலிருந்து புதுரெட்டியூர் கிராமத்திற்குச் செல்லும் சாலைக்கும் கடத்தூர் மேல்நிலைப்பள்ளிக்கும் இடைப்பட்ட பகுதியில் சாம்பல்மேடு உள்ளது. இம்மேட்டிலிருந்து புதிய கற்கால மற்றும் நுண்கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. மேலும் இங்கு முத்திரையிடப்பட்ட வெள்ளிக் காசு, ஒன்றும் (PUNCH MARKED COIN) சேகரிக்கப்பட்டது. எனவே நுண்கற் கருவி காலம், புதிய கற்கருவிகாலம், மற்றும் பெருங்கற்காலம் ஆகிய மூன்று காலகட்டங்களைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்திருந்ததற்கான தடயங்களை இப்பகுதியில் மேற்கொள்ளும் அகழாய்வு மூலம் அறியலாம்.

### முத்துக்குமாரவேல் மலை

வேலூர் மாவட்டம் வேலூர் வட்டத்தில் ஒடுகத்தூர் அப்புக்கல் சாலையில் பின்னாதூருக்கு அருகில் உள்ள ஊர் முத்துக்குமாரவேல் மலையாகும். இம் மலையின் வடபுறம் ஆத்துமேடு என்று அழைக்கப்படும் சுமார் 20 ஏக்கர் நிலப்பரப்பில் பெருங்கற்கால மக்கள் வாழ்ந்திருந்த வாழ்விடம் (HABITATION SITE) இருந்து பின்னர் அழிந்து போனதற்கான தடயங்களாக இங்கு கருப்பு, சிவப்புப் பானை ஓடுகள், சிவப்பு வண்ணப் பானை ஓடுகள், கருப்பு வண்ண ஓடுகள் கிடைத்துள்ளன. எனவே புதிய கற்காலம் முதல் பெருங்கற்காலம் வரையிலான காலகட்டத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்க்கை நிலையை அறிய இங்கு அகழாய்வு மேற்கொள்ளலாம்.

### புலிமேடு

வேலூர் மாவட்டம், வேலூர் வட்டத்தில் வேலூர் அணைக்கட்டு சாலையில் வேலூரிலிருந்து 10 கி.மீ. தூரத்தில் புலிமேடு என்ற ஊர் அமைந்துள்ளது.

இவ்வூருக்குக் கிழக்கு புறத்தில் உள்ள மலையடிவாரத்துக்கு அருகில் 'நத்தமேடு' என்று வழங்கப்படும் பெரியமேடு உள்ளது. புலிமேடு ஊருக்கு வடபுறத்தில் பெருங் கற்கால கல்வட்டங்கள் (MEGALITHIC CAIRN CIRCLE) காணப்படுகின்றன. அகழாய்வுக்கு ஏற்ற இடமாகுமிது.

### இடையார்பாளையம்

கோவை மாவட்டம், பல்லடம் வட்டம் வெள்ளலூருக்குத் தென்மேற்கில் இடையார்பாளையம் அமைந்துள்ளது. இவ்விடத்தில் சங்ககாலக் கூரை ஓடுகள் உடைந்த செங்கற்கள் ஆகியவை கிடைத்துள்ளன. மேலும் சங்ககாலத்தைச் சேர்ந்த இரும்புக் கழிவு உருண்டைகள் (IRON SLAG) ஏராளமாகக் கிடைக்கின்றன,

### ஜம்பை

விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம், திருக்கோயிலூரில் இருந்து 20 கி.மீ. தூரத்தில் மூங்கில்துறைப்பட்டி செல்லும் சாலையில் மணலூர்ப் பேட்டைக்கருகில், ஜம்பை உள்ளது.

இவ்வூரில் கீழ்நத்தம், மேல்நத்தம், கோட்டைக்கரை என வழங்கப்படும் இடங்களில் சங்க காலத்திய கி.மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரையிலானக் காலக்கட்டத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்புப் பானை ஓடுகள் மத்திய காலத்திய பானை ஓடுகள், சோழர் காலத்தியக் கூரை ஓடுகளும் கிடைத்துள்ளன.

மேலும் இங்குள்ள ஜம்புகேஸ்வரர் கோயிலில் சோழர் காலத்திய 50-க்கும் மேற்பட்டக் கல்வெட்டுக்கள் உள்ளன. எனவே கி,மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி, 12-ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து இவ்வூரில் மக்கள் வாழ்ந்திருந்ததற்கான சான்றுகள் கிடைப்பதால் இங்கு அகழாய்வு மேற்கொண்டால் புதிய செய்திகள் தெரியவரும்.

### மேல்வாலை

விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம் கண்டாச்சிபுரத்திலிருந்து விழுப்புரம் செல்லும் பாதையில் உள்ளது.

இவ்வூர் அருகில் உள்ள கீழ்வாலை என்ற இடத்தில் உள்ள 'இரத்தக் குடைக்கல்' என அழைக்கப்படும் மூன்று பாறைகளில் நான்கிடங்களில் பழங்காலப் பாறை ஓவியங்கள் காணப்படுகின்றன. இப்பாறை ஓவியங்களின் அருகில் உள்ள கொல்லை நிலத்தில் பழங்கால ஓடுகள் சேகரிக்கப்பட்டன. இப்பகுதியில் அகழாய்வு செய்வதால், பாறை ஓவியங்களின் காலத்தினைத் துல்லியமாக கணிக்க இயலும்,

### பரிகல்நத்தம்

விழுப்புரம் மாவட்டம், உளுந்தூர்ப்பேட்டையிலிருந்து விழுப்புரம் செல்லும் வழியில் 12 கி.மீ. தொலைவில் பரிகல்நத்தம் உள்ளது. விழுப்புரத்திலிருந்து இவ்வூர் 25 கி.மீ. தூரத்தில் உள்ளது.

பரிகல் நத்தம் ஏரிப்பகுதியில் 20 ஏக்கருக்கு மேற்பட்ட பரப்பில் ஏரிக்குக் கிழக்கில் பெருங்கற்காலத்திய வட்டப் புதைகுழிகள் நூற்றுக்கணக்கில் உள்ளன. இப்புதைகுழிகளின் மேற்பரப்பில் கருப்பு சிவப்புப் பானை ஓடுகள் சிவப்புநிற ஜாடிகள், இரும்புக் கத்தி ஆகியவை கிடைத்துள்ளதால், பெருங்கற்காலத்தினைப் பற்றி அறிய இங்கு மேற்கொள்ளப்படும் அகழாய்வு துணை செய்யும்.

### மேலப்பெரும்பள்ளம்

நாகை மாவட்டம், தரங்கம்பாடி வட்டத்தில் மேலப்பெரும்பள்ளம் அமைந்துள்ளது.

இவ்வூரில் அமைந்துள்ள பெரிய மேட்டுத்திடல் என்னும் இடத்தில் 25 ஏக்கர் நிலப்பரப்பில், பல முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. இங்கிருந்து சுடுமட்கலயம், கிண்ணம், கெட்டியான எலும்புத்துண்டுகள் இரும்பால் ஆன போர்வாள் போன்றவை கண்டெடுக்கப்பட்டுள்ளன. எனவே தஞ்சை மாவட்டத்தில் பெருங்கற்காலத்திய மக்கள் வாழ்க்கை முறையினை அறிய இங்கு மேற்கொள்ளப்படும் அகழாய்வு துணை செய்யும்.

### தலைச்சங்காடு

பூம்புகாரின் தெற்கில் அமைந்துள்ள தலைச்சங்காடு தமிழில் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரில் உள்ள ஊராட்சி ஒன்றியப் பள்ளியின் பின்புறம் பூமிக்கடியில் கருங்கற் சுவர் தொடர்ச்சியாகச் செல்வது அறியப்பட்டது. இக்கருங்கற் சுவரின், பலகைக் கல்லில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு காணப்படுகிறது. எனவே இப்பகுதியில் அகழாய்வு மேற்கொண்டால், பூமிக்கு அடியில் கட்டட அமைப்பு பற்றியும் தலைச்சங்காடு பகுதியின் தொன்மையினையும் பூம்புகாரின் பெருமையையும் அறியலாம்.

### கரைமேடு-மணல்மேடு

நாகை மாவட்டம் சீர்காழி வட்டத்தில், சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் வழியில் 5 கி.மீ. தொலைவில் உப்பனாற்றங்கரையில் அமைந்துள்ளது.

கரைமேடு கிராமத்தில் உள்ள நீண்ட புஞ்சை திடலில் பல முதுமக்கள் தாழிகள் வரிசையாகப் புதையுண்டிருப்பது தெரியவந்துள்ளது. ஒவ்வொரு தாழியும் நாலடி உயரமும், இரண்டரை அடி விட்டமும் உடையதாக உள்ளது. தாழியின்

மேல் சுடுமண் தொட்டியால் மூடப்பட்டுள்ளது. தோண்டப்பட்ட ஒரு தாழியினுள் மனித எலும்புகளும், பெருங்கற்கால ஈமச் சின்னங்களில் பொதுவாகக் காணப்படும் மட்கலன்களும், இரும்பால் ஆன பட்டாக்கத்தி, மற்றும் குறுவாள் (உறையுடன்) போன்ற தொல்பொருட்களும் கிடைத்துள்ளன. எனவே பூம்புகாரின் வடமேற்கில் அமைந்துள்ள இவ்வூரை ஆய்வு செய்தால் பூம்புகார் பற்றிய பல அரிய வரலாற்றுத் தடயங்கள் கிடைக்கக் கூடும்.

### நெடுங்கூர்

கரூர் மாவட்டம், அரவக்குறிச்சி வட்டம் கரூர், கோவை நெடுஞ்சாலையில் கரூரிலிருந்து 25கி.மீ. தொலைவில், தென்புறம் நெடுங்கூர் அமைந்துள்ளது.

நெடுங்கூரின் வடகிழக்குத் திசையில் சுமார் 20 ஏக்கர் பரப்பளவில் 53 பெருங்கற்கால ஈமச் சின்னங்கள் காணப்படுகின்றன, மேற்குக் கடற்கரையிலிருந்து பாலக்காட்டுக் கணவாய் வழியாகச் சூலூர், காங்கேயம், கருவூர், உறையூர் வழியாகக் கீழைக்கடற்கரைக்குச் செல்லும் வழியில் கரூருக்கு மிக அருகில் அமைந்துள்ளது நெடுங்கூர். எனவே நெடுங்கூரில் உள்ள பெருங்கற்கால வரலாற்றுச் சின்னங்களை ஆய்வு செய்வதன் மூலம், இப்பகுதியின் தொன்மையான வரலாற்றினை வெளிப்படுத்த இயலும்.

### வெள்ளலூர்

கோவை மாவட்டம், கோவை வட்டத்தில் அமைந்துள்ள ஊர் வெள்ளலூராகும்.

இவ்வூரில் தற்செயலாகத் தோண்டும்போது பல அரிய தொல்பொருட்கள் கிடைத்து வருகின்றன. வெள்ளலூரில், கிடைத்த ரோமானிய மன்னர்கள் வெளியிட்ட வெள்ளி நாணயங்கள், கார்னீலியன் மணி பதித்த மோதிரங்கள், தங்கத்தாலி தங்கப்பதக்கம் போன்ற பல அரிய தொல்பொருட்கள், தற்போது சென்னை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளன. வெள்ளலூரில் உப்பிலியார்மேடு, காடுகுட்டை போன்ற மண் மேடுகளில் அகழாய்வு செய்தால், வெள்ளலூரில் சங்ககாலம் தொடங்கிச் சோழர்காலம் வரை பண்டைய மக்களின் வாழ்க்கை நிலையை அறியலாம்.

### செலமலை

தேனி மாவட்டம் போடி நாயக்கனூருக்கு அருகில் உள்ள ஊராகும் இது. இவ்வூரில் புதியக் கற்காலக் கல்லாயுதங்கள் மேற்பரப்பிலேயே கிடைத்ததால், தமிழகத்தின் தென்பகுதியில் புதிய கற்கால மக்கள் வாழ்க்கை முறையினை அறிய இங்கு மேற்கொள்ளப்படும் அகழாய்வு துணை செய்யும்.

### இருகூர்

கோவை மாவட்டம், கோவையிலிருந்து திருச்சி செல்லும் பெருவழியில் ஒரு கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு முதுமக்கள் தாழிகள், கருப்பு, சிவப்பு வண்ண மட்கலன்கள், சுடுமண் பொம்மைகள் ஆகியவை கிடைக்கின்றன. கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இவ்வூரில் வீரகேரளன் செப்பேடுகள் கிடைத்துள்ளன. எனவே பெருங்கற்காலம் முதல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தை பற்றி அறிய இங்கு அகழாய்வு மேற்கொள்ளலாம்.

### முத்துக்கவுண்டன் புதூர் (சூலூர்)

கோவைக்கு அருகேயுள்ள சூலூரில் ரோமானிய காசுகளும் சங்ககாலத் தொல்பொருட்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. எனவே அகழாய்வின் மூலம் பல அரிய தொல்பொருட்கள் கிடைக்க வாய்ப்புள்ளது.

### கமலாபுரம்

வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டம் பேராணம்பட்டு சாலையில் கமலாபுரம் என்ற ஊர் உள்ளது. குடியாத்தத்திலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ள சேர்வைக்காரன்பட்டி என்ற ஊர் வரையில் பெருங்கற்கால கல் வட்டங்கள் (CAIRN CIRCLES) பெருமளவில் காணப்படுகின்றன. இங்கு நிலத்தைத் தோண்டும் போது நான்குகால் ஜாடிகளும், மண்டைகளும் [BOWLS] மற்றும் சிதைந்த இரும்புத் துண்டுகளும் கிடைத்துள்ளன. தொண்டை மண்டலத்தில் பெருங்கற்காலச் சின்னங்கள் பற்றி அறிய கமலாபுரத்தில் நடத்தப்படும் ஆய்வு துணை செய்யும்.

### மாம்பாக்கம்

காஞ்சிபுரம் மாவட்டம், ஸ்ரீபெரும்புதூர் வட்டம், சென்னை பெரும்புதூர் வழியில் ஸ்ரீபெரும்புதூரிலிருந்து 2 கி.மீ. தொலைவில் மாம்பாக்கம் அமைந்துள்ளது.

பெருங்கற்காலத்தைச் சேர்ந்த மிகப்பெரிய ஈமப்பேழையும் (SARCOP HAGUS] மிகச் சிறிய ஈமப்பேழை ஒன்றும், மண்டை (BOWL) ஒன்றும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இது போன்ற மிகப்பெரிய ஈமப்பேழை கிடைப்பது அரிதே ஆகும். தற்போது இவை தொல்லியல் துறையின் பூண்டி அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. எனவே, இவ்விடத்தினை அகழாய்வு செய்வதன்மூலம் பெருங்கற்கால மக்களின் வாழ்க்கை நிலையை அறிய இயலும்.

### நாராயண மங்கலம்

பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டத்தில் அமைந்துள்ளது நாரண மங்கலம் என்ற ஊராகும்.

இவ்வூரில் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இக்கல்வட்டங்கள் உருண்டையான கற்களை வட்டமாக வைத்து அதன் மேற் பகுதியில் கற்களை குவித்து வைத்துள்ளனர். இவ்விடத்தை ஆய்வு செய்வதன் மூலம், அக்காலத்தில் இறந்தவர்களைப் புதைத்த முறையினை அறியலாம்.

***புலார்***

பெரம்பலூர் மாவட்டம், அரியலூர் வட்டத்தில் அமைந்துள்ள புலார் கிராமத்தில், பெருங்கற்காலத்தைச் சேர்ந்த தாழி வகை நினைவுச் சின்னங்கள் பெருமளவில் உள்ளன. மேலும் பெருங்கற்காலத்தைச் சார்ந்த மக்கள் வாழ்விடங் களும் காணப்படுகின்றன. எனவே, பெரம்பலூர், அரியலூர் பகுதிகளில் பெருங்கற்காலச் சின்னங்களின் வகைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள இங்கு அகழாய்வு மேற்கொள்ளலாம்.





## வீரசிங்கம்பேட்டை என்னும் ஆயிரத்தளி

தஞ்சை மாவட்டம், திருவையாறு வட்டத்தில் தஞ்சையிலிருந்து திருக் கண்டியூர் வழியாக அய்யம்பேட்டை செல்லும் பேருந்து வழித்தடத்தில், தஞ்சை யிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. பல்லவர் காலத்தைச் சேர்ந்த கற்சிலைகள், நூற்றுக்கணக்கான சிவலிங்கங்கள், ஆகியவை வீரசிங்கம்பேட்டை மற்றும் அதைச் சுற்றியுள்ள ஆளிக்கரை, செங்கம்மேடு, நாலுசாமிமேடு, இரட்டைக்கோயில் ஆகிய பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

வீரசிங்கம்பேட்டை எனும் ஆயிரத்தளி கல்வெட்டுகளில் நித்த விநோத வளநாட்டு கிழார் கூற்றத்து நந்திபுரமான ஆயிரத்தளி என்று கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறது. பல்லவர் காலத்து அரண்மனை மற்றும் பழைய கற்கோயிலின் எச்சங்கள் கிடைப்பதால் இவ்விடம் சமயம் சார்ந்த வரலாற்றுக்காலச் சிறப்பினைப் பெறுகிறது. எனவே உகந்த இடமாக இது அமைகிறது.



# 4

# வழூர் சப்தமாதர் சிற்பங்கள் மாறுபட்ட அமைப்பு - ஓராய்வு

**அர. வசந்தகல்யாணி**
கல்வெட்டாய்வாளர்

தாய்த்தெய்வ வழிபாடு தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்து வருகின்றது. தாய்த்தெய்வங்களின் உருவங்கள் பல தமிழகத்தில் ஆங்காங்கு கிடைத்து வருவது இவ்வழிபாட்டின் சிறப்பையும் பழமையையும் நமக்கு உணர்த்துகின்றன. காலப் போக்கில் இதுவே சக்தி வழிபாடாகப் போற்றப்பட்டு அறுவகைச் சமயங்களுள் ஒன்றாகச் சாக்தம் என்ற பெயரில் சிறப்புற்றது. இவ்வழிபாட்டில் முழுமுதற் கடவுள் தேவியே. இவளுடைய ஒத்துழைப்பின்றி பிரம்மத்தை அடைய இயலாது என்பது கருத்து. இவளே கண்ணுக்குப் புலனாகாஉலக சக்தி. ஒவ்வோர் அணுவிலும் நிறைந்து நிற்பவள். ஒல்வொரு மனிதனுள்ளும் உறைந்து நிற்பவள்.

இந்தத் தேவி பல வடிவங்களில் பல பெயர்களில் வழிபடப் படுகின்றாள். சைவத்தோடும் வைணவத்தோடும் பல வகைகளில் தொடர்பு படுத்தப்பட்டு வணங்கப்படுகிறாள். இவர்களுள் சைவத் தோடு தொடர்புடைய துர்க்கைதான் ஏராளமான வடிவங்களில் வணங்கப்படுவதைச் சிற்பங்கள் வழியே அறிகிறோம். துர்க்கை, மகிஷாசுரமர்த்தனி, உமா, பார்வதி, காளி, அன்னபூரணி என்று என்று பலவகையாக அறீகின்றோம். லக்ஷ்மி, பாமா ருக்மிணி, ஸ்ரீதேவி, பூதேவி என்று வைணவத்தில் காண்கிறோம். இவர்கள் தவிர கல்விக்கடவுள் சரஸ்வதியும் முக்கியக் கடவுளாகும். தவிர ஒரு காலத்தில் மிக உன்னத நிலையில் வழிபடப்பட்டு, இன்று வழி பாடே இல்லாமல் இருக்கும் ஜேஷ்டா எனப்படும் மூதேவி, சப்த கன்னியர் என்றும், ஏழுகன்னியர் என்றும், தாய்மார் எழுவர் என்றும் இன்று வரை வணங்கப்படும் சப்தமாதர் ஆகியோரும் தேவி வழிபாட்டின் கீழ் வருபவர்களே.

சப்தமாதர் (அ) தாய்மார் எழுவர் தமிழகத்தின் நகரந் தொடங்கி கிராமம் வரை போற்றப்பட்டுத் தனிக்கோயில்களிலும் சிவன் கோயிற் பரிவார தெய்வமாகவும் உள்ளதை அறிகிறோம்.

**புரணங்களில் சப்தமாதர் தோற்றமும் அமைப்பும்**

அந்தாககசுரன் எனும் அசுரர் தலைவனது தொல்லைகட்கு ஆட்பட்ட தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, இறைவனும் தன் பூதகணங்களின் புடைசூழ அசுரனை அழிக்கப் புறப்பட்டார். இறைவனுக்கு உதவ விஷ்ணு முதலான தெய்வங்களும் உடன் சென்றனர். சிவபெருமான் தனது வலிமைமிக்க திரிசூலத்தை எறிந்து அவனைக் காயப்படுத்தி விடுகிறார். அந்தகாசுரனது உடலிலிருந்து பெருகிய குருதி வெள்ளத்தின் ஒவ்வொரு துளியும் ஓர் அரக்கனாக உருமாறி மீண்டும் சிவபெருமானைத் தாக்கத் தொடங்கினர். இறைவனோ தன்னுடைய சூலத்தின் வலிமையால் உண்மையான அசுரனைத் தாக்குகிறார். விஷ்ணுவோ குருதி யிலிருந்து உருப்பெற்ற அசுரர்களை அழிக்கத் தொடங்குகிறார். சிவபெருமான் தன்னுடைய வாயிலிருந்து வெளிப்படும் அனற் பிழம்பிலிருந்து யோகேஸ்வரி எனும் சக்தியை உருவாக்கிக் குருதித் துளி மண்ணில்படா வண்ணம் தடுக்கச்செய்கிறார். இச்செயல் கண்டு சிவபெருமானுக்கு உதவிட இந்திரன் முதலானோர் தமது சக்தியரை அனுப்புகின்றனர். அவர்களே (பிரம்மனிலிருந்து) பிராம்மணி; (மகேஸ்வரனிலிருந்து) மாகேஸ்வரி; (கௌமாரனி லிருந்து) கௌமாரி; (விஷ்ணுவிலிந்து) வைஷ்ணவி; (வராக அவதாரத்திலிருந்து) வாராகி; (இந்திரனிலிருந்து) இந்திராணி; (யமனிலிருந்து) சாமுண்டா எனப்பட்டனர். இவர்கள் ஆண் தெய்வக்கூறு என்பதால் அந்தந்த ஆண் தெய்வங்கள் போலவே ஆயுதங்கள் எந்தி வாகனங்கள், கொடியோடு காணப்பட்டனர். இவ்வனைவரின் உதவியோடும் சிவபெருமான் அந்தகாசுரனை அடக்கினார். இதுவே சப்தமாதர் பற்றிய கதை. இக்கதை பல புராணங்களில் கூறப்படுகின்றது. சிற்ப நூல்களிலும் ஆகமங் களிலும் இவற்றுக்கு வடிவ இலக்கணம் தரப்படுகின்றது. சப்தமாதர் அமர்ந்த கோலத்தில் நான்கு கரங்களுடன் வடிக்கப்படுதல் வேண்டும் கரங்களில் அந்தந்த ஆண் தெய்வங்களுக்குரிய ஆயுதங் கள் காட்டப்படுதல் வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. அமர்ந்த கோலத்தில் உள்ள சிற்பங்கள் ஒரு காலை மடித்து ஒரு காலைத் தொங்கவிட்டுப் பத்ரபீடம் (அ) பத்மபீடத்தில் காணப்படும். சில இடங்களில் பீடத்தின்கீழ் வாகனங்கள் காட்டப்படுதலும் உண்டு. தமிழகத்தில் இந்த வகையில் அமைந்துள்ள சிற்பங்களே பெரும்பான்மையாகக் கிடைத்துள்ளன. இவ்வகையில் அமைந்த சப்தமாதர் சிற்பங்களுள் காலத்தால் முற்பட்டது, இராஜசிம்ம பல்லவ மன்னனால் கட்டப்பட்ட காஞ்சி கைலாசநாதர் கோயிலில் உள்ளது. இது பரிவார தெய்வங்களுள் ஒன்றாகும். காலத்தால் முற்பட்ட

தனி சப்தமாதர் கோயில்திருச்சி மாவட்டத்திலுள்ள ஆலப்பாக்கத்தில் உள்ளது. இதுதவிர தென்னார்க்காடு மாவட்டம் சித்தலிங்கமடம், சென்னைக்கருகே வேளச்சேரி, மைசூர் மாநிலம் கோலார் ஆகிய இடங்களில் சப்தமாதர்க்கெனத் தனிக்கோயில்கள் உள்ளன.

## வழூர்ச் சிற்பங்களும் மாறுபட்ட அமைப்பின் காரணமும்

இவ்வமைப்பினின்று மாறி வடிக்கப்பட்டுள்ள சப்தமாதர் சிற்பக்குழு ஒன்று திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் வழூர் கிராமத்திலுள்ள அயன்புரீஸ்வரர் கோயிலில் உள்ளது. இச்சிற்பங்களின் அமர்ந்த கோலத்தில் உள்ள மாறுபாடு கருதத்தக்கது. இக்கோயிலில் சப்தமாதரும் உடன் அமரும் வீரபத்திரரும் பத்ரபீடத்தின் மீது இரண்டு கால்களையும் மடக்கி அர்த்த பத்மாசனக் கோலத்தில் அமர்ந்திருப்பது சிறப்பம்சமாகக் கருதத்தக்கது. பெரும்பாலான ஆகம நூல்கள் கூறுவதினின்றும் மாறி இவை அமைந்திருக்க யாதேனும் காரணம் இருத்தல் வேண்டும் என்ற ஆய்வுக் கண்ணோட்டத்தில் பார்த்த போது வராக புராணம் கூறும் சற்று மாறுபாடான கதை இதற்குச் சரியான விளக்கமாக அமைந்தது.

வராகபுராணக் கதையின்படி அந்தகாசுரன் மற்றும் மாத்ருக்களின் ஒட்டுவமையானது ஞானத்தோடு தொடர்புடையவையாகக் கூறப்பட்டுள்ளது. அந்தக்காரத்தோடு அதாவது அறியாமை என்னும் இருளோடு போரிடுவது ஆத்மவித்யா

''ஏதத் தே சர்வம் ஆக்யாதம் ஆத்மா வித்யாம்ருதம்''
சிவனுடைய வித்யாஞானம் அவித்யா எனும் இருளான அந்தகாசுரனுக்கு எதிராகப் போரிடுகிறது. இந்த இருளை முழுதுமாக அழிக்காவிடில் அது மீண்டும் மீண்டும் தலைதூக்கும். இதைத்தான் அந்தகாசுரனின் குருதிப் பெருக்கம் சுட்டுகிறது. காம, குரோதம் முதலான எண்வகைத் தீயகுணங்கள் முழுதுமாக வித்யையின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப் படாவிட்டால் இருளை அகற்ற முடியாது என்று சப்தமாதர், அந்தகாசுரன் ஆகியோரை ஞானத்தோடு தொடர்புபடுத்திக் கூறியுள்ளது வராகபுராணம்.

ஆகவே ஒருவகையில் ஞானத்திற்கும் சப்தமாதருக்கும் உள்ள தொடர்பு பெறப்படுகிறது. ஞானத்திற்கும் யோகத்திற்கும் தொடர்பு உள்ளதும் அறிந்த ஒன்று. அதாவது யோக நிலையில் மனத்தை ஒரு

நிலைப்படுத்தி ஞானம் பெறுதல் வேண்டும் என்பதால் ஞானக் கடவுளரின் சிற்பங்கள் யோக நிலையில் காட்டப்படும். தக்ஷிணா மூர்த்தி, சாஸ்தா, பிரம்மா, சரஸ்வதி ஆகியோர் யோக நிலையில் சிற்பங்களில் காட்டப்படுகின்றனர். இன்னின்ன ஆசனங்கள் இன்னின்ன முத்திரைகள் இன்னின்ன உணர்வுகளை எடுத்துக் கூறுகின்றன என்கிறது சிற்ப இலக்கணம். பத்மாசனக் கோலத்தில் அமர்ந்திருப்பது யோக நிலைக்கு அதாவது ஞானத்திற்கு அறிகுறி. மீண்டும் இங்கு வராக புராணக் கூற்றுப்படி வீரத்திற்கு மட்டுமன்றி, போர்க்கடவுளாக மட்டுமின்றி ஞானத்திற்கும் தொடர்புடைய தெய்வங்கள் சப்தமாதர் என்பது நினைவுகூரத்தக்கது. எனவே தான் பொதுவான சிற்ப இலக்கணத்திலிருந்து சற்றே மாறுபட்டு அவர்கள் ஞானக் கடவுளர் என்பதைக் காட்ட அர்த்தபத்மா சனத்தில் சப்தமாதரை அமைந்துள்ளனர் என்ற சிறப்பான காரணம் மேற்கூறிய கருத்தால் தெளிவுபடுகிறது.

இந்தச் சிறிய ஆய்வுக் கருத்தை மனதில் கொண்டு வழூர்ச் சிவன்கோயிற் சப்தமாதர் சிற்பங்களின் அழகிய அமைப்புகளைத் தனித்தனியே காண்போம்.

## வழூர் சப்தமாதர் அமைப்பும் அழகும்

சப்தமாதர் மற்றும் வீரபத்திரர் ஆகியோர் பத்ம பீடத்தில் அர்த்த பத்மாசனத்தில் அமர்ந்துள்ள சிறப்பான தோற்றத்தோடு, பொதுவான தோற்றங்களைக் கீழ்வருமாறு காணலாம்.

### *பிரமி*

பிரம்மனுடைய இணை என்பதால் நான்கு தலைகளுடன் காணப்படுகிறாள். கழுத்தில் நிறைந்த அணிகளுடன் காட்டப் பட்டிருக்கிறாள். நான்கு கரங்களில் கெண்டி, அக்கமாலை, அபய, வரதமுத்திரை உள்ளன. பீடத்தில் அன்னவாகனம் காட்டப் பட்டுள்ளது.

### *மாகேஸ்வரி*

மாகேஸ்வரனுடைய இனணயான இத்தேவியின் நான்கு கரங்கள் மழு, மானேந்தி அபய வரதம் காட்டுகின்றன. பீடத்தில் காளை வாகனம் காணப்படுகிறது.

**இந்திராணி**

இந்திரனுடைய பெண்சக்தியான இந்திராணியின் நான்கு கரங்கள் சக்தி அங்குசம் அபய வரதத்துடன் காணப்படுகின்றன. பீடத்தில் யானை வாகனம் வடிக்கப்பட்டுள்ளது.

**வைஷ்ணவி**

இத்தேவி விஷ்ணுவின் அம்சமாக இருப்பதால் விஷ்ணுவைப் போலவே அணிகலன்கள் பூண்டிருக்கக் காண்கிறோம். நான்கு கரங்கள் சக்கரம் சங்கு ஏந்தியும் அபயம் வரதமுத்திரையிலும் காட்டப்பட்டுள்ளன. பத்மபீடத்தில் கருடன் அஞ்சலித்த நிலையில் காட்டப்பட்டுள்ளான்.

**வாராகி**

திருமாலின் வராக அவதாரத்தின் இணையான வாராகி கரண்ட மகுடமணிந்து காட்சியளிக்கிறாள். நான்கு கரங்களில் கலப்பை, தண்டு அபயம் வரதம் காட்டப்பட்டுள்ளன. பீடத்தில் அவளது வாகனமாக சிம்மம் காட்டப்பட்டுள்ளது.

**கௌமாரி**

முருகனது சக்தியான கௌமாரியின் சிற்பம் தலையில் கரண்ட மகுடம் காணப்படுகிறது. ஆனால் முருகனுக்குரிய தடித்த கண்ணி முன் நெற்றியில் காட்டப்படவில்லை. நான்கு கரங்களில் மலர், அக்கமாலை, அபய, வரதம் காட்டப்பட்டு உள்ளன. பீடத்தில் மயில்வாகனம் காட்டப்பட்டுள்ளது.

**சாமுண்டா**

பொதுவாக யமனது சக்தியான சாமுண்டா மிகவும் பயங்கரத் தோற்றம்கொண்டவளாகக் காட்டப்படுவாள். தலையில் ஜ்வாலா மகுடமும் காதுகளில் பிரேத பத்ரகுண்டலங்களும் காட்சியளிக்கும் இத்தேவி மேலிரு கரங்களில் சூலம் கபாலம் ஏந்திக் கீழிரு கரங்களில் அபயம் வரதம் காட்டுகிறாள். பீடத்தில் பிரேத வாகனம் காட்டப்பட்டுள்ளது.

